REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ✱ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: ஐப்பசி 11உ. சனி (27—10—56) ★ ★ வெளியீடு: ஐப்பசி 12உ. ஞாயிறு (28—10—56) [இதழ் 119

## செங்கற்பட்டு-சின்ன சேலம் இரயில் பாதை

கள்ளக்குறிச்சி, திருவண்ணாமலை, வந்தவாசி வழியாகச் சின்ன சேலம்—செங்கற்பட்டு இடையே, ஒரு புதிய இரயில் பாதையை அமைப்பதற்கு முடிவு செய்யப்பட்டுள்ளதாம். இதற்காகப் போக்குவரத்து 'சர்வே'யை மேற்கொள்ள இந்திய இரயில்வே போர்டும் அனுமதியளித்துள்ளதாம்.

இந்தப் பாதையின் மொத்த நீளம் 120 மைல்களாகும். இதனால், வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களிலுள்ள முக்கிய வர்த்தக, விவசாயப் பகுதிகளுக்கு வசதி ஏற்படும்.

# இந்தித் திணிப்பில் இந்தி வெறியர் கள்ளச் செயல்

## பேசும் மொழிக்கு மாறாக பழம் நூல் இந்தியைப் புகுத்தும் வஞ்சகம்

### 'அது ராஷ்டிர பாஷை ஆகாது'

### 'அதைப் பயில மாணவர்களால் முடியவும் முடியாது'

### பம்பாய் குடிமகனின் குமுறல்

இந்தியத் துணைக் கண்டத்தின் பொதுமொழியாகச் சொல் வழக்கில் உள்ள இந்திமொழி ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பதாக அரசியல் சட்டம் அறிவிக்கிறது; இதையே, காங்கிரசுத் தலைவர்களும் விளக்கி வலியுறுத்தி வருகின்றனர்.

ஆனால், செயலிலோ வேறு போக்கினை, மிகுதியும் வடமொழி கலப்புடைய இந்தி மொழியைப் புகுத்துவதில் இந்திமொழிப் பற்றுடையோர் தீவிரம் காட்டி வருகின்றனர். அவ்வகை இந்தியைக் கற்பதால், இந்தியைத் தாய்மொழியாகக் கொண்டில்லாதவர்களுக்கு அதிக சங்கடம் இருக்கிறது. அத்தகைய இந்தியைப் பொது மொழியாக அரசியல் சட்டமும் ஒப்புக்கொண்டிருக்கவில்லை.

அரசியல் சட்டக் கட்டளைக்கு விரோதமாக, வடமொழி மயமான இந்தியைப் புகுத்துவதில் இந்திமொழிப் பற்றுடையவர்கள் எவ்வாறு செயல்பட்டு வருகிறார்கள் என்பதை நம்மவர் விளங்கிக் கொள்ள, கீழ் தரப்பட்டுள்ள நடைமுறைச் சம்பவம் ஒன்றே போதுமானதாகும்.

பம்பாய் பள்ளிகளில், உயர்நிலை வகுப்பில் வைக்கப்பட்டுள்ள இந்தி பாட புத்தகங்கள் குறித்து, துவிய்வேதே என்பார், 'டைம்ஸ் ஆப் இந்தியா' இதழில் ஒரு கடிதம் எழுதியுள்ளார். அக்கடிதத்தின் சாரம் கீழே தரப்பட்டு இருக்கிறது.

இந்திமொழிப் பற்றுடையோரின் போக்கு குறித்து ஒரு பம்பாய் வாசியே இவ்வாறு கருதுகிறார் என்பது கருதத்தக்கதாகும்.

"அரசாங்கப் பரீட்சைக்கான உயர்நிலை வகுப்புக்கு வைக்கப்பட்டுள்ள இந்திப் பாட புத்தகங்களில் இடம் பெற்றுள்ள சிறப்புப் பாடங்கள் திருப்திகரமானதாக இல்லை. இந்தியாவின் பொது மொழியாக இருக்கும் என அறிவிக்கப்பட்டுள்ள இந்தி, வட நாட்டில் மக்களால் பேசப்பட்டு வருவதும், நாட்டினரால் சுலபமாக விளங்கிக் கொள்ளக் கூடியதுமாகும்; அது, அதிகப்படியான வட மொழிச் சாயலோ உருது மொழிச் சாயலோ பெற்றில்லாத 'கரிபோலி' என வழங்கப்பட்டுவரும் இந்தி மொழியாகும்.

"வைக்கப்பட்டுள்ள பாட புத்தகத்தில் இடம் பெற்றுள்ள சிறப்புக் கவிதைகள், இந்த 'ராஷ்டிர பாஷை'யைச் சேர்ந்ததாக இல்லை; (இந்தி மொழி வகையைச் சேர்ந்த) அவந்தி, பிர்ஜி, இராசஸ்தானி போன்ற தொன்மை வழக்குடையதாக இருக்கிறது. அத்தகைய பழைமை வழக்கில் உள்ள இந்தி, பலரால் உணர்ந்து கொள்ளப்படுவது என்பது வீண் தொல்லை தருவதாகும். இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டிராத பம்பாய் மாணவர்களுக்கு, அதனால் எவ்வளவு சங்கடம ஏற்படும் என்பதைக் குறிப்பிடத் தேவையே இல்லை.

"அதுபோன்றே, உயர்நிலைப் பரீட்சைக்காக வைக்கப்பட்டுள்ள 'சித்ரலேகா' என்ற கதை நூலும், திருப்தியற்ற ஏற்பாடேயாகும். அது உயர்ந்த வடமொழி மயமான இந்தியில் எழுதப்பட்டதாக இருக்கிறது. அதை, இப்பொழுது பேச்சு வழக்கில் இருந்து வரும் இந்தியில் எழுதப்பட்டிருப்பதாகச் சொல்வதற்கில்லை. எனவே, அது ஒருக்காலும் 'ராஷ்டிர பாஷை' யாகாது.

"அறியப்பட்டு வருவதும் பேசப்பட்டு வருவதுமான இந்தி மொழியில் மாணவர்களுக்குள்ள பயிற்சியை அறிவதற்குத்தான் இந்திப் பரீட்சைகள் நடத்தப் பெறுகின்றன என்பதை, பாட புத்தகங்களைப் பொறுக்கும் அதிகாரிகள் கருத்தில் வைக்க வேண்டும். 'ராஷ்டிர பாஷை' யாக இருக்கப்போகும் இந்தியில் மாணவர்கள் அறிவு பெறுவதுதான் முக்கியமே அல்லாது, மொழி ஆராய்ச்சியில் ஈடுபடுவோர்களுக்குத் தேவைப்படும் தொன்மை வழக்குடைய இந்தியில் மாணவர்களுக்குள்ள அறிவைச் சோதிப்பது முக்கியமல்ல என்பதை அதிகாரிகள் அறியவேண்டும்."

## ஆந்திர மந்திரி சபை

கர்னூல், அக். 26—

ஆந்திராவில் கோபால ரெட்டியின் அமைச்சரவை இன்று இராஜிநாமா செய்துவிட்டது.

## 'மொழி அடிப்படையில் பாகுபாடு இருக்காது'

### பம்பாய் முதலமைச்சர் கூறுகிறார்

நவம்பர் முதல் புதிய மாநிலங்கள் அமைக்கப்படுவதால், பம்பாய் மாநிலத்தில் அங்கம் வகித்தோர் மைசூர் மாநிலத்திற்குச் செல்லுவதை முன்னிட்டு, பம்பாயில் 40 கழகங்கள் சார்பில் ஒரு பிரிவுபசார விழா நடைபெற்றது.

விழாவில் புதிய பம்பாய் மாநில முதலமைச்சர் சாவன் பேசுகையில் எதிர்காலத்தில், இருமொழி மாநிலமாக அமைந்துள்ள பம்பாயில், மொழியை அடிப்படையாகக் கொண்டு பாகுபாடு எதும் இருக்காது என்றும் மராத்தி, குசராத்தி, கன்னடம், தமிழ், மலையாளம் மற்றும் வேறு எந்த மொழிக்கும் பாதுகாப்பும், சம உரிமையும் அளிக்கப்படும் என்றும் கூறினார்.

மேலும் அவர் பேசுகையில், மொழி உணர்ச்சிகூடாது என்றும் நாட்டு உணர்ச்சி முதலிடம்பெற்று எல்லோரும் சகோதர மனப்பான்மையுடன் வாழவேண்டும் என்றும் கூறினார்.

## புதிய மாநிலங்களின் அமைச்சரவைகள்

### புதியதோர் தோற்றத்தைத் தரக்கூடுமாம்

புதுடில்லி, அக். 25—

"நவம்பர் முதல் புதிதாக அமையவிருக்கும் பஞ்சாப், மத்தியப் பிரதேசம், இராசஸ்தான், மைசூர், ஆந்திரம் ஆகிய மாநிலங்களில் ஏற்படும் புதிய அமைச்சரவைகள், ஒரு புதிய தோற்றத்தைத் தரும்," என்று, காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு உறுப்பினர் மாதவன் நாயர் கூறியுள்ளார்.

இந்த ஆறு மாநிலங்களில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள காங்கிரஸ் சட்டசபைக் கட்சித் தலைவர்கள், தாங்கள் அமைக்கும் அமைச்சரவையில் மாதர்களுக்கும், பிற்பட்ட வகுப்பினருக்கும், சிறுபான்மையினருக்கும், தொழிலாளர்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்று காங்கிரஸ் மேலிடத்திடம் கூறியுள்ளதாகத் தெரிகிறது.

# 'கலாச்சாரத் தூதுக்குழுவில் தமிழ்க் கலைஞர்களுக்கு இடமில்லை'

## 'தமிழ்க் கலைகள், கலைஞர்கள்பால் சங்கீத—நாடக அகாடமிக்கு அக்கரை கிடையாது'

"அண்மையில் வெளிநாட்டுக்குச் சென்ற இந்தியக் கலாச்சாரத் தூதுக் குழுவில் தமிழ்நாட்டுக் கலைஞர்கள் முற்றிலுமாகப் புறக்கணிக்கப்பட்டுள்ளனர்; ஆனால், அதே நேரத்தில், பம்பாய் மாநிலத்திலிருந்து மட்டும் 20 கலைஞர்கள் அத்தூதுக் குழுவில் இடம் பெற்றிருக்கின்றனர்"

என்று, தென்னிந்திய நடிகர் சங்கச் செயலாளரான தோழர் டி. என். சிவதாணு அவர்கள், கோவையில் தென்னவர் கலை மன்றத்தைத் திறந்துவைத்துப் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

அக்கூட்டத்தில் அவர் மேலும் குறிப்பிட்டதாவது:—

"சர்க்காரிடமிருந்து கணிசமான அளவு மானிய உதவி பெற்று இயங்கிவரும் சங்கீத—நாடக அகாடமி, தென்னிந்தியக் கலைகள், கலைஞர்கள் பற்றிப் போதிய அக்கரை காட்டுவதே இல்லை. சென்னையிலிருக்கும் சங்கீத, நாடக அகாடமி செலவிடும சுமார் ரூ. 45,000-த்தில் பெரும் பகுதியும் கலைகளின் முன்னேற்றத்திற்காகச் செலவிடப்படவில்லை.

"வெளிநாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வரும் தலைவர்களுக்கு இங்குள்ள சிறந்த கலைகளையெல்லாம் காண்பிக்க ஏற்பாடுகள் செய்யப்படுவதே கிடையாது. உதாரணமாக, அண்மையில் ரஷ்யத் தலைவர்களான புல்கானின், குருஷ்சேவ் ஆகியோர் தமிழ் நாட்டிற்கு வந்திருந்தபோது, தஞ்சை, மதுரை, பேரூர் ஆகிய இடங்களில் உள்ள கோவில்களில் காணப்பெறும் சிறந்த சிற்பங்களைக்காட்ட இங்குள்ளவர்கள் தவறிவிட்டார்கள்.

"ரஷ்யத் தலைவர்களுக்கு சென்னையில், தமிழ் நாட்டிலுள்ள சிறந்த இரண்டு கலைஞர்களின் பரத நாட்டியத்தைக் காட்ட முற்பட்டபோது, தென்னிந்திய நடிகர் சங்கம் மிகக் கடுமையான எதிர்ப்புகளையும் சமாளிக்க வேண்டியதாயிற்று.

"தமிழ் மக்கள் கலைகள் பற்றி அதிகமான அளவில் அக்கரை செலுத்த வேண்டும். இதா

(4-ம் பக்கம் பார்க்க)

## ஆர். அங்கமுத்து சவ அடக்கம்

சென்னை மாணவர் மன்ற சிறப்புறுப்பினரும், மணியரசு மன்றம், தொழிலாளர் கழகம், இந்தி எதிர்ப்பு இயக்கம், நீதிக்கட்சி முதலிய பல கழகங்களில் நெருங்கிய தொடர்பு கொண்டு சலியாது உழைத்தவருமான தோழர் ஆர். அங்கமுத்து அவர்கள், 25-10-56 இரவு 8-30 மணிக்கு உயிர் துறந்தார்.

26-10-56 மாலை 6 மணிக்கு சவ ஊர்வலம் நடைபெற்றது. திரு. மயிலை-சிவமுத்து சென்னை நகராண்மைக் கழக உதவி கமிஷனர் என். சங்கரன், தி. மு. கழகப் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், காஞ்சி-கல்யாணசுந்தரம், மற்றும் ஏராளமான நண்பர்கள், உறவினர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்.

மயானத்தில் திரு. மயிலை-சிவமுத்து, இரா. நெடுஞ்செழியன், கோ. வில்வபதி, வல்லை-பாலசுப்பிரமணியம், மற்றும் பலர், தோழர் அங்கமுத்து அவர்களின் சிறப்பியல்புகளையும் அருந்தொண்டினையும் பாராட்டிப்பேசி, தமது ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டனர். மறைந்த அன்பருக்கு 49-வது வயது முடிந்து 50-வது வயது நடக்கிறது. அவர் இருதய நோயினால் துன்பப்பட்டுக்கொண்டு இருந்தார். அவருக்கு மனைவி மக்கள் எவரும் இல்லாமையால் அவருடைய நண்பர்களும் சுற்றத்தினருமே அவரது இறுதிச் சடங்கை நிறைவேற்றி வைத்தனர்.

காலஞ்சென்ற தோழர் ஆர். அங்கமுத்து அவர்களின் நீண்டகால நண்பரும், கொத்தவால் சாவடியில் பிரபல வெங்காய வியாபாரியுமான குப்புசாமி அவர்கள், காலஞ்சென்ற தனது உயிர்த் தோழரின் சவ அடக்கத்திற்கான உதவிகள் அனைத்தையும் செய்தது, இறந்த நண்பர்பால் தமக்கிருந்த அளவற்றப் பற்றுதலைக் காட்டும் அளவுகோலாக அமைந்தது.

நம் நாடு
தி.மு.கழக இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 27—10—'56 சனி

# ஆச்சாரியார் அறிவிப்பு

ஆளும் காங்கிரசுக் கட்சிக்கு எதிராக ஒரு சமபலம் கொண்ட அல்லது ஏறத்தாழ ஒத்த நிலை கொண்ட ஒரு எதிர்க் கட்சி செயல்பட வேண்டியதின் இன்றியமையாமை குறித்து வற்புறுத்திப் பேசியுள்ள சக்ரவர்த்தி இராசகோபாலாச்சாரியார், அதற்கான சிலபல கருத்துக்களையும் சுட்டிக்காட்டியுள்ளார். அவை குறித்து ஆராய்ந்து பார்க்க வேண்டியது, மக்களாட்சி முறைக்குத் தங்களை ஒப்படைத்துக்கொண்டிருக்கும் நம்போன்றோர் நீங்காக் கடமையாகிறது.

மாற்றுக்கட்சி அரசாங்கத்தை அமைத்துவிடக்கூடும் என்ற அச்சம் காங்கிரசுக் கட்சிக்கு ஏற்படவில்லையானால், ஆளும் கட்சியான காங்கிரசு சர்வாதிகார நிலை எய்திவிடுவதுடன், அரசும் சர்வாதிகார அரசாக அமைந்துவிடக்கூடிய அபாயம் ஏற்பட்டுவிடக்கூடும் என்று ஆச்சாரியார் அறிவிக்கிறார். அதே நேரத்தில் இந்தியத் துணைக்கண்டத்தின் எதிர்கால நம்பிக்கையும் நாசமாகிவிடும் என்றும் ஆச்சாரியார் துடிதுடிக்கிறார்.

காங்கிரசுக் கட்சியின் இயல்பும் தரமும் பாதுகாக்கப்படுவதற்காகவாவது, ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளக் கூடிய அளவினதாக உள்ள ஒரு எதிர்க்கட்சி அமைய வேண்டியது அவசியத்திலும் அவசியமாகும் எனவும் ஆச்சாரியார் அறிவுறுத்துகிறார்.

எதிர்க்கட்சி வெற்றிகரமாகச் செயல்படுவதற்குக் காங்கிரசுக் கட்சியின் நடைமுறைகளில் காணப்பெறும் தவறுகளையே, அடிப்படைப் பிரச்சினையாகக் கொண்டு செயலாற்றுவது சாத்தியமாகும் என்றும் ஆச்சாரியார் வகை கூறுகிறார்.

எதிர்க்கட்சியின் அவசியம் குறித்தும், அதற்குத் தேவைப்படும் அடிப்படைப் பிரச்சினை குறித்தும் விளக்கமாகக் குறிப்பிட்டுள்ள ஆச்சாரியார், அத்தகு எதிர்க்கட்சி அமைக்கப் புகும் தலைவர்களுக்கு இருந்தாகவேண்டிய தகுதி பற்றியும் தெளிவு படுத்தியுள்ளார். அதாவது, மாற்றுக் கட்சியை அமைக்க முன்வரும் தலைவர்கள், நற்பண்புடையவர்களாகவும் மக்கள் நம்பிக்கைகொள்வதற்குப் பாத்திரமானவர்களாகவும் இருக்கவேண்டும் என்று ஆச்சாரியார் எடுத்துக் காட்டியுள்ளார்.

இவ்வளவும் மாற்றுக் கட்சியின் இன்றியமையாமை குறித்து விளக்கமாகத் தம் கருத்தைக் கூறியுள்ள ஆச்சாரியார், நற்பண்பு கொண்டவர்களும் மக்களின் நம்பிக்கைக்கு அருகதையுடையவர்களும் காங்கிரஸ் கட்சியில்தான் இருக்கின்றனர் எனவும், மாற்றுக் கட்சியை அமைப்பது அவர்களால்தான் சாத்தியமாகும் எனப் பொருள்படும்படியாக மாற்றுக் கட்சியை அமைக்க அவர்கள் முன்வரவேண்டும் எனவும் பேசி இருப்பதை நம்மால் விளங்கிக்கொள்ள முடியவில்லை.

'காங்கிரஸ் கட்சியில்தான் நற்பண்புடையவர்களும் நம்பிக்கைக்கேற்றவர்களும் இருக்கிறார்கள்; நாட்டில் அத்தகைய உயர்ந்தவர்கள் இல்லை' என ஆச்சாரியார் எவ்வாறு முடிவு கட்டுகிறார் என்பது தெரிய வேண்டும்.

ஆச்சாரியார் கூற்றுப்படி, காங்கிரசுக் கட்சியில் இருந்து வரும் தலைவர்கள் எனப்படுவோர் ஒவ்வொருவரும், நற்பண்பிற்கும் நம்பிக்கைக்கும் பிறப்பிடமாக இருப்பவர்களானால், அவர்களில் சிலர் அக்கட்சியை விட்டு நீங்கி எதிர்க் கட்சியைத் தோற்றுவித்தபோதிலும், அப்புதுக் கட்சிக்கு ஆதரவு தர, மக்கள் எப்படி முன்வருவர்? நற்பண்புடையவர்களாகப் பலர் காங்கிரசுக் கட்சியில் இருந்துவரும் பொழுது, காங்கிரசுக் கட்சியை விட்டு விலகிய சில நல்லவர்களை மட்டுமே கொண்டு உருவாகியுள்ள எதிர்க்கட்சியை ஆதரித்தாக வேண்டிய ஆசையும் அவசியமும் பொதுமக்களுக்கு எவ்வாறு ஏற்படக்கூடும்? மிக மிகச் சாமானியர்களுக்கும் விளங்கக்கூடிய இந்தச் சாதாரண நியாயம் ஆச்சாரியாருக்கு விளங்கி இருக்காது என எவர்தான் நம்புவர்?

காங்கிரசுக் கட்சித் தலைவர்களின் ஒத்துழைப்பு இல்லாமல், மக்களாட்சி முறையில் பற்றும், மக்கள் நலத்தில் அக்கரையும் கொண்ட மற்றவர்கள் ஒன்று சேர்ந்து, மாற்றுக்கட்சி ஒன்றை உருவாக்க எடுத்துக் கொண்டுவரும் அரிய முயற்சியை, ஆரம்பத்திலேயே கெடுத்துவிடக்கூடிய ஒரு அபாயம், ஆச்சாரியார் ஆலோசனையில் அமைந்திருக்கிறது என்பதை நாம் தெளிவுபடுத்த ஆசைப்படுகிறோம். காங்கிரசுக்கு எதிர்க்கட்சி ஒன்று உருவாவதுதான் ஆச்சாரியாரின் உள்ளக்கிடக்கையாக இருக்குமானால், அம்மாற்றுக் கட்சி காங்கிரசுத் தலைவர்களைக் கொண்ட கட்சியாக இருந்தாக வேண்டும் என ஆச்சாரியார் கூறத்தேவையே இல்லை.

ஆச்சாரியார் விரும்புகிறபடி காங்கிரசுக் கட்சியைவிட்டுசிலர் வெளியேறி, ஒரு எதிர்க்கட்சியை அமைக்க முன்வராது போகும் பட்சத்தில், மற்றவர்களால் அமைக்கப்பெறும் ஒரு கட்சியை சரியான எதிர்க்கட்சி என ஆச்சாரியார் ஒப்புக்கொள்ளக்கூடமாட்டார் என்றே, நாம் அவர் பேச்சிலிருந்து முடிவுகட்ட வேண்டியவர்களாகிறோம். சிறக,

ஆச்சாரியார் ஆசைகொள்ளுகிறபடி, காங்கிரசுக் கட்சியைவிட்டு நீங்கி, ஆச்சாரியா கிருபளானி, ஜெயபிரகாஷ் நாராயணன், என். ஜி. இரங்கா, ஆந்திரகேசரி பிரகாசம், காலஞ்சென்ற சங்கர்ராவ் தேவ் போன்றவர்கள் ஒன்றுகூடி உருவாக்கிய எதிர்க்கட்சி இப்பொழுது பெற்றுள்ள நிலையை, ஆச்சாரியார் அறிந்திருக்கவில்லையா எனக் கேட்கிறோம். அவர்களை நற்பண்பற்றவர்கள் என ஆச்சாரியார் கூறத் துணியார் என்பதையும் நாம் அறிவோம்.

காங்கிரசுக் கட்சியை விட்டு நீங்கி, ஒரு எதிர்க்கட்சியை உருவாக்க அவர்களால் எடுத்துக்கொண்ட முயற்சி முழுத் தோல்வியில் முடிந்திருப்பதைக் கண்ட பிறகும், காங்கிரசுத் தலைவர்களில் சிலரைக் கொண்டு காங்கிரசுக்கு எதிராக ஒரு எதிர்க்கட்சி துவங்கப்பட்டால், அதற்கு மக்களின் நல்லாதரவு கிடைக்கக்கூடும் என எதிர்பார்க்க, ஆச்சாரியார் எவ்வாறு மனந் துணிந்தாரோ?

காங்கிரசுக் கட்சியில் இன்றும் நற்பண்பாளர்கள் பலர் இருந்து வருகின்றனர் என, உண்மையிலேயே ஆச்சாரியார் நம்புகிறாரா என்பதும் தெரிந்தாக வேண்டும். அப்படி, அவர் நம்பி இருப்பார் என நாம் எதிர்பார்க்கவில்லை.

மற்றவர்களால் உருவாக்கப்படும் எதிர்க்கட்சி முயற்சியைக் கெடுப்பதில், ஏதோ தமது பங்கையும் நிறைவேற்றி வைப்போம் என்ற ரீதியில்தான், ஆச்சாரியார் காங்கிரசுக்கட்சித் தலைவர்களைக்கொண்டே மாற்றுக் கட்சி அமைக்கும் கருத்தைக் குறிப்பிட்டிருக்கிறார் என்றே நாம் திட்டவட்டமாக நம்புகிறோம்.

தாம் முன்வந்து ஒரு எதிர்க்கட்சியை அமைக்கப்போவதில்லை என்றும் ஆச்சாரியார் அறிவித்துள்ளார். தாமும் முன்வராது, காங்கிரஸ் தலைவர்களும் முன்வராது இருக்கும் நிலையில், மாற்றுக் கட்சியின் அவசியம் குறித்துப் பேசிய ஆச்சாரியாருக்கு இருதய சுத்தமிருக்குமானால், வேறு மாற்றுக் கட்சி உருவெடுப்பதை, தாம் ஆதரிக்க விரும்பவில்லையானாலும், மறைமுகமாகக் கேடு செய்ய நினைப்பதிலிருந்தாவது அவர் நீங்கி இருக்கவேண்டும். அப்பொழுதான், மக்களாட்சிக் காப்பில் தமக்குள்ளதாகக் குறிப்பிடும் அவருடைய பற்றில், பொதுமக்கள் அவநம்பிக்கை கொள்ளாதிருப்பது சாத்தியமாகும்.

## அழிவை விளைவிக்கும் அமெரிக்கக் குண்டு!

எல்பாஸோ, அக். 24—

எதிரிகளின் நகரங்கள் மீது வெடிக்கச் செய்தால், அதை வெடித்த நாட்டு மக்களையும் பூண்டோடு அழித்துவிடக் கூடிய நீர்வளிக்குண்டு அமெரிக்காவிடம் இருக்கிறதாம்!

இந்த அச்சத்தின் காரணமாகவே அந்தக் குண்டை வெடித்துப் பரிசோதிக்காமல் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

## நீர்வளிக்குண்டு பரிசோதனைகளை நிறுத்த முடியாதாம்!

வாஷிங்டன், அக். 24—

"நீர்வளிக்குண்டுப் பரிசோதனைகளை அமெரிக்கா நிறுத்தத் துணியாது" என்று அமெரிக்கத் தலைவர் அறிவித்துள்ளார்.

எதிர்காலத்தில் போர் மூளாத நிலையும், எல்லா நாடுகளுக்கிடையே கட்டுப்பாடும், படைபலக் குறைப்பும் ஏற்படாத வரையில் பரிசோதனைகள் நீடிக்கும் என்றும் அவர் கூறியுள்ளார்.

## சமஸ்கிருத மொழிப் பள்ளிகளுக்கு சம்பளச் சலுகையாம்!

திரு-கொச்சி மாநிலத்தில் சமஸ்கிருத பள்ளிகளில் படிக்கும் மாணவர்களுக்கு அடுத்துவரும் மூன்றாண்டு காலத்திற்கு அரைச் சம்பளச் சலுகை தரப்படும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

'கரும்புச் சக்கை'யிலிருந்து

## செய்தித்தாள்!

ரூ. 5½ கோடி செலவாகும்

புதுடில்லி, அக். 25—

கரும்புச் சக்கையிலிருந்து ஆண்டுதோறும் 30,000 டன் செய்தித்தாள் தயாரிப்பதற்கு தேசியத் தொழில் முன்னேற்ற நிறுவனம் யோசித்து வருவதாகத் தெரிகிறது.

இந்தத் திட்டத்திற்காக ரூ. 5½ கோடி ஒதுக்கப்படுமென்று தெரிகிறது.

இதற்கான தொழிற்சாலை அமைப்பது பற்றி ஒரு ஜெர்மன் நிறுவனம் பரிசீலனைக்குப்பின் சிபாரிசுகள் செய்திருப்பதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

விரைவில் இத்தாலிய நாட்டிலிருந்தும் அவ்வாறான அறிக்கை கிடைக்குமெனத் தெரிகிறது.

தென்னிந்தியாவிலுள்ளபெரிய சர்க்கரை ஆலைக்குச் சமீபத்தில் இந்தத் தொழிற்சாலையை நிறுவலாம் என்றும் ஜெர்மன் அறிக்கை கூறியுள்ளது.

தொழிற்சாலைக்கு ஆண்டுதோறும் 50,000டன் கரும்புசக்கை தேவைப்படுகிறது. தற்போது இந்தச்சக்கைகள், ஆலைகளில், விறகுக்குப் பதில் பயன்படுகிறது.

தற்போது வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் செய்தித் தாள் விலை டன் ஒன்றுக்கு ரூ. 870 ஆகிறது; இந்தத் திட்டப்படி இங்கு தொழிற்சாலை அமைந்தால் டன் ஒன்றுக்கு ரூ. 600-தான் ஆகும் என்று கருதப்படுகிறது.

இந்தியாவிற்கு ஆண்டுக்கு 1,00,000 டன் செய்தித் தாள் தேவைப்படுகிறது.

தற்போது மத்தியப் பிரதேசத்தில் அமைக்கப்பட்டுள்ள காகிதத் தொழிற்சாலையில் 30,,000 டன் செய்தித்தாள் மட்டுமே கிடைக்குமென்று நம்பப்படுகிறது.

## பள்ளி மாணவர் உடற் பரிசோதனைத் திட்டம்

சென்னை, அக். 25—

15 நகரங்களில் உள்ள உயர்நிலைப்பள்ளி மாணவர்களை உடற்பரிசோதனை செய்கிற ஒரு திட்டத்தை அமுல் செய்வது பற்றி சர்க்கார் யோசித்துக்கொண்டிருப்பதாக மந்திரி மாணிக்கவேலர் சட்டசபையில் தெரிவித்திருக்கிறார்.

ஏற்கனவே 25 சதவிகித மாணவர்கள் போதுமான சத்துள்ள உணவு அருந்துவதில்லை என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. இதனை மீண்டும் பரிசோதிக்கத்தான், உடற்பரிசோதனைத் திட்டம்.

இது இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படும் என்றும் மந்திரி தெரிவித்திருக்கிறார்.

## 20 இலட்சம் டன் உருக்கு இறக்குமதியாகுமாம்!

டில்லி அமைச்சர் அறிவிக்கிறார்

பாட்னா, அக். 25—

நடைமுறை நிதி ஆண்டில் 20 இலட்சம் டன் உருக்கும், 10இலட்சம் டன் சிமெண்டும் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படும் என்று மத்திய அரசாங்க கனரகத் தொழில் அமைச்சர் ஷா அறிவித்துள்ளார். இதுவரை 8 இலட்சம் டன் உருக்கு இறக்குமதி செய்யப்பட்டிருக்கிறதாம்.

## இன்சூரன்ஸ் திட்டம் மேலும் பரவலாகிறது

அரசாங்கத்தின் இன்சூரன்ஸ் திட்டம் அக். 27-ந் தேதி முதல் மதுரை, அம்பாசமுத்திரம், தூத்துக்குடி ஆகிய மூன்று நகரங்களுக்குப் பரவலாக்கப்படுகிறது. இதனால் மேலும் 38,000 ஊழியர்களுக்கு இந்தத்திட்டத்தின் மூலம் பலன் கிடைக்குமாம்.

இந்தியாவில் இத்திட்டம் மொத்தம் 10,57,000 சிப்பந்திகள் கொண்ட 39 தொழில் நிலையங்களில் ஏற்கனவே அமுல் செய்யப்பட்டுள்ளது.



## ஏப்ரல் திங்களில் பொதுத் தேர்தல்?

பண்டித நேரு தரும் தகவல்

"மார்ச் திங்கள் இறுதியிலேயோ ஏப்ரல் திங்கள் துவக்கத்திலேயோ பொதுத் தேர்தல்கள் நடைபெறும்; தேர்தலுக்கான தேதிகள், சீக்கிரமே நிர்ணயிக்கப்படும். அதற்கான ஏற்பாடுகள் செய்ய நேரம் வேண்டுமென எண்ணுகிறோம். மேலும், கடுமையான கோடையும் தாண்டவேண்டும் என்றும் கருதுகிறோம்" என்று பண்டித நேரு கூறியிருக்கிறார்!

## சென்னை துறைமுகத் தொழிலாளர்கள்

வேலை நிறுத்தம் செய்வர்?

சென்னை, அக். 25—

சென்னை துறைமுகத் தொழிலாளர்கள் ஊதிய உயர்வு கேட்டுள்ளனர்; இதுவரை அவர்களின் கோரிக்கைகள் கவனிக்கப்படவில்லை. எனவே, நேற்று நடைபெற்ற கமிட்டிக் கூட்டத்தில், நவம்பர் 15-ந்தேதிக்குமேல் வேலை நிறுத்தம் செய்வதென்று முடிவு செய்யப்பட்டது. இதற்காக 12பேர் கொண்ட ஒரு கமிட்டியும் அமைக்கப்பட்டுள்ளது.

## சம்பளம் குறையாதாம்— அமைச்சர் கூறுகிறார்

சென்னை, அக். 25—

இதுவரையில் டில்லி நிர்வாகத்தின்கீழ் இருந்துவந்த வேலை தேடித்தரும் நிலையத்தை மாநில அரசாங்கம் ஏற்று நடத்தப்போகிறதல்லவா? அதனால் அந்த நிறுவனத்தில் பணிபுரியும் ஊழியர்களின் சம்பளம் குறைக்கப்படமாட்டாது என்றும், தற்போதுள்ள சம்பளமே தொடர்ந்து தரப்படுமென்றும் அமைச்சர் பக்தவத்சலம் சட்டசபையில் அறிவித்துள்ளார்.

## சி. பி. சிற்றரசு பேச்சு

(3-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

விட்டார் என்று தெரிந்தும், அதுவரை சும்மா இருந்துவிட்டு, அதற்குப் பிறகு, 'ஏன் இறந்தார்?' என்ற காரணத்தை ஆராயத் தொடங்கியிருக்கிற இந்தக் காமராசரின் கருணை உள்ளத்தைத்தான் எதற்கு ஒப்பிடுவது?

"சங்கரலிங்கனார் நம் கட்சியினரல்ல; அவர் வேறு கட்சியைச் சார்ந்தவர்தான்; என்றாலும், அவர் இறந்ததற்காக நாம் அனுதாபப்படவில்லையா?

"மக்கள் தங்கள் வாழ்வை, வாழ்வு உரிமையைக் கேட்டால் அவர்களுக்குத் தரப்படுவது விலங்கு-தடியடி-சிறை! அந்த அளவிற்கு இங்கு நிலைமை போகிறதென்றால் நாம், இந்த ஆட்சியாளருக்கு நல்ல புத்தி புகட்ட ஏன் ரஷ்யாவையும், பிரான்சையும், ஜெர்மனியையும் எடுத்துக் காட்டக்கூடாது? நம்மைப் பார்த்து 'அறிவற்றவர்கள்' என்று கூறுகிறார்களே? பிரெஞ்சுப் புரட்சியை நடத்தினவர்கள் அனைவரும் அறிவாளிகளாக இருந்தவர்களா என்று நாம் அவர்களைப் பார்த்துத் திருப்பிக் கேட்கிறோம். அதே நேரத்தில் பிரான்சில் நடைபெற்றதென்ன என்பதையும் உணரக் கேட்டுக் கொள்கிறோம்.

"வெளிநாட்டான் யாராவது இங்கு வந்து பார்த்தால், நாமெல்லாம் சுதந்திரம் வாங்கினவர்களைப் போலவா அவன் கண்களுக்குக் காணப்படுகிறோம்? இந்த நாடு சுதந்திரம் பெற்றதென்பதற்கான அடையாளம் எங்கே? காங்கிரசாரைக் கேட்டால், 'என் பஸ்ஸுக்கு வேண்டிய பர்மிட்டுகள் கிடைத்திருக்கிறது' என்று ஒருவரும், 'எனக்கு இரண்டு மில்கள் இருக்கின்றன' என்று இன்னொருவரும், 'எங்கள் கணக்குகளையே 'செக்' பண்ணுவது கிடையாது' என்று மற்றொருவரும் கூறுகின்றனர்; இதுவா சுதந்திரத்தின் அடையாளம்?"



# மக்கள் மானத்தோடும் வீரத்தோடும் வாழ...!

## 'தி. மு. கழகம் குருதியைக் கொட்டவும் தயங்காது'

## 'தூங்கும் புலியை தட்டி எழுப்பி விட்டார் காமராசர்'

## 'நாம் அமைதி பெறுவது கொள்கைகள் வெற்றி பெறும்போதுதான்'

தோழர் சிற்றரசு இடி முழக்கம்

"இந்த நாட்டில் அரசியல் நாகரிகம் போய்விட்டது. மனிதனை மனிதன் மதிக்கும் பழக்கம் மாறிவிட்டது. யார் யாராலெல்லாம் இந்த நாடு உருவாயிற்றோ, அவர்களெல்லாம் இன்று காங்கிரசாரால் மூலைக்கு மூலை தள்ளப்பட்டு விட்டனர். அந்தத் தியாகிகளின் சின்னங்கள் எல்லாம் இப்போது எங்கே காணப்படுகின்றன?

"காமராசர் ஆளுவதுதான் ஆட்சியா? அதைவிட நல்லதொரு ஆட்சி நடத்தக்கூடிய வேறு ஒரு கட்சியாகத் திராவிட முன்னேற்றக் கழகம் ஏன் இருக்கக்கூடாது என்றுதான் நாம் கேட்கிறோம்.

"நாட்டு மக்களுக்கு அரசியல் அறிவு வரும்வரையில்—வளரும் வரையில் பொறுத்திருப்போம்; இந்த நாடு என்றாவது ஒரு நாள் வீரத்தோடு, மானத்தோடு வாழ திராவிட முன்னேற்றக் கழகம் தனது இரத்தத்தைக் கொடுத்தாகிலும் பாடுபடத்தான் செய்யும்.

"நாம் திராவிட நாடு விடுதலை பெறவேண்டுமென்பது எந்தவித சுயநல இலாபத்திற்கும் அல்ல. நல்ல ஒரு செடியை நட்டால், என்றாவது ஒரு நாள் அந்தச் செடி வளர்ந்து மரமாகி, பருவமாகி, காய்த்துப் பழந்தரும் என்ற தத்துவம் கொண்டவர்கள் நாங்கள். அந்த விதமான புரட்சி எண்ணத்தோடு—சுதந்திர ஆர்வத்தோடு நாம் வருங்கால திராவிட நாட்டை உருவாக்க இருக்கிறோம்.

"புரட்சி எண்ணத்தோடு இருக்கிற நம்மைத்தான், 'தூங்கும் புலியைத் தட்டி எழுப்பினது போல்' என்ற சீன நாட்டுப் பழமொழிபோல, 'தூங்கும் புலி' நிலையிலிருந்த நமது திராவிட முன்னேற்றக் கழகத்தைத்தான் காமராசர் தட்டி எழுப்பிவிட்டார். எது நல்லதோ, அது இறந்துவிட்டது; எது இறந்ததோ அது மீண்டும் எழுந்துவிட்டது. எது யோக்கியமோ, அது இறந்தது; எது இறந்ததோ அது மீண்டும் உயிர்பெற்றெழுந்து விட்டது.

"உனக்கு அமைதி தேவை என்றால், உன் கொள்கை வெற்றி பெறுவதுதான் அதற்கு வழி; உனக்கு நீயே அமைதியை உண்டாக்க உன் கொள்கையை வெற்றி பெறச்செய்' என்று அமெரிக்க அறிஞர் எமர்சன் கூறியதுபோலவே இன்று திராவிட முன்னேற்றக் கழகம் தனக்கு அமைதி தேடிக் கொள்ள விரும்புகிறது."

இவ்வாறு 24-10-56-ல் சென்னை—சைதாப்பேட்டை சின்னமலையில், 49-வது வட்ட தி. மு. கழகக் கிளையினைத் திறந்துவைத்துப் பேசுகையில், தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் குறிப்பிட்டார்.

## நிகழ்ச்சிகள்

24—10—56 மாலை 6½ மணியளவில், சென்னை—சைதாப்பேட்டையை அடுத்த சின்னமலையில், சென்னை 49-வது வட்ட தி. மு. கழகக் கிளை திறப்பு விழா பொதுக் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்திற்குத் தோழர் இராபர்ட் தலைமை வகித்தார்.

தோழர் சைதை-சம்பந்தம், சென்னை மாவட்டச் தி. மு. கழகச் செயலாளர் தோழர் இளம்பரிதி ஆகியோர் கழகக் கொள்கைகளை விளக்கியும், அப்பகுதியில் கழகம் வளர ஊக்கம் தருமாறு பொதுமக்களை வேண்டிக்கொண்டும், 'தமிழ் நாடு' எனப் பெயரிடுமாறு கோரி உண்ணாவிரதம் இருந்து மறைந்த சங்கரலிங்கனார் பற்றி வருத்தமோ, கவலையோ கொள்ளாத இந்த சர்க்காரின் போக்கைக் கண்டித்தும் சொற்பொழிவாற்றினர்.

இறுதியில் தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் 49-வது வட்டக் கிளையினைத் திறந்துவைத்துப் பேசினார்.

கூட்டத்தில் ஆயிரக்கணக்கான பொதுமக்கள் கூடியிருந்து இறுதி வரையில் கருத்து விளக்கம் கேட்டுச் சென்றனர்.

தோழர் சிற்றரசு அவர்களுக்கு 'மாடர்ன் ஏஜென்சி' சார்பில் மலர் மாலை அணிவிக்கப்பட்டது.

தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் தொடர்ந்து பேசியதாவது:—

"இந்த நாட்டை ஆண்டுகொண்டிருக்கிற மந்திரிகள் மக்களுக்காக ஏதாவது நன்மைகள் செய்திருக்கிறார்களா? நன்மைதான் செய்ய வேண்டாம்; தங்களுக்குப் பின் இந்த நாட்டை ஆளத் தகுதிபடைத்தவர்களாக மற்றவர்களைத் தயாராவது செய்திருக்க வேண்டாமா? தாங்கள் போன பின்னர் வேறு யார் இந்த நாட்டை ஆள்வது என்று வது கருதியிருக்க வேண்டாமா?

"ஏதாவது ஒரு மேல் நாட்டில், அந்த நாட்டை ஆளுகிறவர் அந்தோனி ஈடனாக இருந்தாலும் சரி, சர்ச்சிலாக இருந்தாலும் அவரிடம் சரி, யாராவது சென்று 'இந்த நாட்டை யார் ஆளவேண்டுமென்று விரும்புகிறீர்கள்?' என்று கேட்டால், நிச்சயம் அவர்கள் 'திறமை உள்ளவன்தான் ஆளவேண்டும்' என்று பதில் கூறுவார்கள், ஆனால் இங்கிருக்கிற நமது காங்கிரஸ் மந்திரிகளோ, 'நாங்களேதான் ஆள வேண்டும்,' என்று கூறுகிறார்கள். இப்படிப்பட்ட மந்திரிகளைக் கொண்டிருக்கிற நமது நாடு எங்கே உருப்படப்போகிறது?

"நம்மைப் பார்த்துக் காங்கிரசார் கேட்கின்றனர்—'உங்களுக்கு யார் 'ஓட்டு' போடுவார்கள்?'—என்று! 'ஓட்' போடுவது யார் என்று யாரைப் பார்த்துக் கேட்கவேண்டும்? நம்மிடமா—மக்களிடமா? 'நீங்கள் யாருக்கு 'ஓட்' போடுவீர்கள்?' என்று மக்களைப் பார்த்தல்லவா இந்தக் காங்கிரசார் கேட்கவேண்டும்?

"'இந்தக் காங்கிரசே நமக்கு வேண்டாம்; நம்முடைய 'ஓட்' காங்கிரசுக்கு இல்லை'—என்று முஸ்லீம் லீக் முடிவு செய்துவிட்டது! என். ஜி. ஓ.க்கள் காங்கிரசாருக்கு 'ஓட்' போடுவார்களா? வியாபாரிகள் 'ஓட்' போடுவார்களா? எப்படியிருந்தாலும் கடைசிநேரத்தில் அவர்களுக்கெல்லாம் 'ஏதாவது கொஞ்சம்' கொடுத்து நிலைமையைச் சரிப்படுத்திக் கொள்ளலாம் என்ற தைரியத்தில் அல்லவா காங்கிரஸ் ஆட்சியாளர்கள் இருக்கின்றனர்?

"மக்களைப் பற்றி இங்குள்ள சர்க்காருக்கு அக்கரை இருந்திருந்தால இங்கு கிடைக்கின்ற கனிப் பொருட்கள் பற்றிக் கொஞ்சமாவது கவலையெடுத்திருக்கமாட்டார்களா? சாத்தூரில் பாலம் ஒன்று கட்டுவதற்காக அஸ்திவாரம் தோண்டும்போது அப்பகுதியில் எண்ணெய் கிடைத்திருக்கிறது! இப்படி ஒரு செய்தி வடநாட்டில் தெரிந்தால், அங்குள்ள தலைவர்களெல்லாம் ஓடிச் சென்று பார்வையிட்டு, என்னென்ன செய்வது என்பதை அப்போதே முடிவு கட்டியிருப்பார்களே! இதற்குள்ளாகவே நேரு சென்று பார்வையிட்டிருப்பார்; பந்த் சென்று பார்வையிட்டிருப்பார்—'இது பெட்ரோல் தானா?' என்ற சந்தேகம் தீர துணியை அதில் தோய்த்துத் தீயிட்டுக் கொளுத்திக்கூடப் பார்த்திருப்பாரே? ஆனால் நமது தமிழ் நாட்டில் எண்ணெய் கிடைக்கிறது என்று தகவல் தெரிந்தது — யாரும் எட்டிக் கூடப் பார்க்கவில்லை—அது நாதியற்றுப்போய், கேட்பாரற்றுக் கிடக்கிறதே?

"இப்போதிருக்கிற நமது மந்திரிகளுக்கெல்லாம் நாட்டு மக்களின் நல்வாழ்வில் கவலையே இல்லை. அவர்களுக்கிருக்கிற ஒரே கவலை தங்களுடைய மந்திரிசபையை எப்படிக் காப்பாற்றிக்கொள்ளுவது என்பதுதான்."

மேலும் அவர் கூறியதாவது:—

"நமது மாகாண மந்திரிகளுக்கு, பிற மாகாண மந்திரிகளுக்கு இருப்பதைப்போல் துணிவு—தைரியம் எதுவும் இல்லை. பிற மாகாண மந்திரிகள் நமது மந்திரிகளைப் போலவா இருக்கிறார்கள்? அவர்களெல்லாம் தங்கள் தங்கள் மாகாணத்திற்குத் தேவையானதெல்லாம் செய்துவிட்டு, 'எங்களுக்கு இவை இவை தேவைப்பட்டன; நாங்களே செய்துகொண்டோம்,' என்று மத்திய சர்க்காரிடம் துணிவுடன் கூறுகின்றனர். ஆனால் நமது மந்திரிகளோ......? மேலும் இங்கு ஒரு அப்பளத் தொழிற்சாலை திறவவேண்டுமானால்கூட வடவர்கள் அல்லவா செய்துதர வேண்டியிருக்கிறது? வடவரை அல்லவா எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர் நமது மந்திரிகள்?

"நமது நாட்டில் இன்னும் ஜனநாயகம் வளரவில்லை. ஏன் ஜனநாயகம் வளரவில்லை? அதற்குக் காரணம் சர்க்காரா—மக்களா? சர்க்கார் கூறுகின்றனர்—'மக்கள்தான்' என்று! ஆனால் நாம் கூறுகிறோம்—'சர்க்கார்தான்' என்று! இவர்கள் ஜனநாயகத்தை அல்லவா முதன் முதலில் மக்களுக்கு விளக்கிக் கூறவேண்டும்? மேல்நாடுகளிலெல்லாம் எதிர்க்கட்சிக்காரர்களுக்குத்தான் எந்த இடத்திலும் முக்கியத்துவம் கொடுக்கிறார்கள்; ஏன்—எதிர்க்கட்சியினரைப் பார்த்து சர்க்காரே பயப்படுகிறார்கள். எதிர்க்கட்சிக்கு என்னென்ன உரிமைகள் தேவையோ அதையெல்லாம் கொடுக்கிறார்கள்.

"நமது தமிழ் நாடு என்ன தரித்திர நாடா? வீரம் இல்லாத நாடா? படையெடுத்து வருவோரை எதிர்த்துப் போரிட முடியாத நாடா? உலகிலேயே முதன் முதலாகக் கடலில் மூழ்கி முத்தெடுத்து உலகிற்குக் காட்டினவன் தமிழன்தானே?-உலகில் தோன்றின முதல் மனித இனமே தமிழ் இனம்தான் என்றுதானே ஆராய்ச்சியாளர்களும் கூறுகின்றனர்? மரக்கலங்கள் கட்டி முதன் முதல் கடலில் சென்றவன் தமிழனுயிற்றே? யானைத் தந்தங்களையும் கடல் முத்துக்களையும் வெளிநாட்டுக்கனுப்பி வியாபாரம் செய்தவன் தமிழனல்லவா? சிறந்த இலக்கியத்தைத் தந்த வித்தகர்கள் முதன் முதல் தோன்றிய நாடு தமிழ் நாடு இல்லையா? உலகிலேயே என்றும் அழியாத மொழி-வேறெந்த மொழியின் துணையும் இன்றித் தனித்தியங்கும் ஆற்றல் பெற்றத் தமிழ் மொழியும் தமிழர்களுடைய மொழியாயிற்றே? இவ்வளவு இருந்தும் தமிழர்கள் ஏன் இன்று வாழ முடியவில்லை?

"இப்படிப்பட்ட தமிழ் இனத்தை இன்று வாழ வழியில்லாமல் செய்துவிட்டது இயற்கை என்றால்கூடப் பரவாயில்லை 'எனப்பா ஆடையில்லை?' என்று கேட்டால், 'என்ன செய்வது? எங்களுக்குத் தேவையான உடை செய்துகொள்ளப் பஞ்சு எடுத்து வந்த கப்பல் 'கடலில் மூழ்கிவிட்டது; எனவே, ஆடை செய்ய வழியில்லை' என்றால் — 'நீ ஏன் கற்கவில்லை?' என்று மற்றொருவரைக் கேட்க, 'எங்களுக்குத் தாய்மொழி இல்லை; அதனால் [illegible] என்று கூறினால் ஒத்து[illegible]வோம்; ஆனால் தமிழர் [illegible] படியல்லவே?

"தமிழர்களாகிய நாம் [illegible]யுமே சிந்திக்க இயலாதவர்களாகப் பழகிவிட்டோம். அதனால்தான் நமக்கு எவ்வளவோ வசதிகள் இருந்தும் நாம் வாழ முடியாமல் தவிக்கிறோம். நம்மிடையே நல்ல அறிவு இருந்திருக்குமானால் நம் அறிவாற்றலை மேலும் வளர்த்திருப்போம்; நமக்கு விஞ்ஞானம் என்றால் என்னவென்று தெரிந்திருந்தால், அவ்விஞ்ஞானத்தைப் பயன்படுத்தி விஞ்ஞானப் பொருட்களைக் கண்டுபிடித்திருப்போம். சட்டம் என்றால் என்னவென்று தெரிந்திருந்தால் பல சட்ட நுணுக்கங்களை ஆராய்ந்திருப்போம்; நீர் வீழ்ச்சிகள் பற்றித் தெரிந்திருந்தால் அவற்றிலிருந்து மின்சக்தியை எப்படி உற்பத்தி செய்வது—விவசாயத்திற்கு எப்படி அதைப் பயன்படுத்துவது என்பதையெல்லாம் பற்றிச் சிந்தித்திருப்போம். ஆனால் அப்படியெல்லாம் நாம் சிந்திக்கவில்லையென்றால் அதற்குக் காரணம், நமது சூழ்நிலைகள் நம்மைச் சிந்திக்கவிடவில்லை. நாம் எப்போதும் எதற்கெடுத்தாலும் கவலைப்பட்டுக்கொண்டே இருக்கவேண்டியவர்களாயிருக்கிறோம். நமது கவலைகளையெல்லாம் துறந்து மகிழ்ச்சியுடனிருந்து எதையும் சிந்திக்கக்கூடிய அளவிற்கு நமது சூழ்நிலைகள் இல்லை."

மேலும் அவர் பேசுகையில் சொன்னார்:—

"இந்த நாட்டிற்குத் 'தமிழ்நாடு' என்று பெயரிடுமாறு கேட்டு உண்ணாவிரதமிருந்த தமிழர்—78-வது வயதில் 77 நாட்களாக உண்ணாவிரதமிருந்தவர்—சிறந்த காங்கிரஸ் ஊழியர்—காந்தியவாதி—சொந்த ஊரிலேயே பிறந்தவர்—தனக்கெல்லாம் மூத்தவர்—தன்னைவிட அதிகக் காலம் இயக்கத் தொண்டு புரிந்தவர்—அப்படிப்பட்டவர் இறந்தார் என்று செய்தி கேட்டும் காமராசர் அழவில்லை; அவர் உடம்பு அசையவில்லை—ஆடவில்லை. அவர் இருக்கும் வரையில் ஒன்றும் சொல்லாமல், அவர் இறந்த இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு காமராசர், 'அவர் ஏன் இறந்தார்' என்று இவரே சிந்தித்துக்கொண்டிருப்பதுபோல் கூறுகிறார். இவர் ஏதோ எங்கேயோ சென்றிருந்ததைப் போலவும், அதற்குள் சங்கரலிங்கனார் இறந்துவிட்டது போலவும், இப்போது அவர் திரும்பி வந்தும் சங்கரனார் மறைவுச் செய்தி கேட்பது போலவும், அவர் ஏன் இறந்தார் என்பதற்கான காரணங்களைக் கண்டுபிடிக்க ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பது போலவும் அல்லவா காணப்படுகிறார் காமராசர்! இவருக்குத்தான் எவ்வளவு கருணை உள்ளம்?

"யாரோ ஒருவன்—எந்த ஊரையோ சேர்ந்தவன்; அவன் மரத்தில் பிணமாகத் தொங்குகிறான்' என்று கேள்விப்பட்டவுடனேயே நாம் துடிக்கிறோம்; ஆனால் உயர்ந்த கோரிக்கைகளுக்காக ஒரு நாளல்ல இருநாளல்ல—76 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து உயிர்

(2-ம் பக்கம் பார்க்க)

## உடுமலையில் தி. மு. கழகத் தேர்தல் ஆய்வுக் குழுவினர்

கோவை மாவட்டம் உடுமலையில் தி. மு. கழகத் தேர்தல் ஆய்வுக் குழுவினர், கூட்டாகப் பலரையும் தனியாக ஒருவரையும் சந்தித்துத் தேர்தல் நிலை அறியும் காட்சிகள்.

# நியாய விலை அரிசிக்கடைகள்

கலெக்டர்களுக்கு சென்னை அரசாங்கத்தின் உத்திரவு

தற்சமயம் சென்னை மாநிலத்தில் 1,000 நியாய விலை அரிசிக் கடைகள் இருக்கிறதாம்.

மேலும் எல்லா மாவட்டங்களிலும் அரிசி விற்பனை செய்வதற்காக எவ்வளவு நியாய விலைக் கடைகளைத் திறக்க முடியுமோ, அவ்வளவு கடைகளைத் திறக்குமாறு எல்லா மாவட்ட கலெக்டர்களுக்கும் அரசாங்கம் உத்திரவு அனுப்பியுள்ளதாகத் தெரிகிறது.

# நெய்வேலிக்கு இயந்திரங்கள்

ஜெர்மன் நிறுவனங்களிடமிருந்து தருவிக்கப்படுமாம்

பான், அக். 26—

நெய்வேலித் திட்டத்திற்குத் தேவைப்படும் இயந்திரங்களுக்காக ஜெர்மன் தொழில் நிறுவனங்களிடம் 25 இலட்சம் ஸ்டர்லிங்குக்கு இந்தியா ஆர்டர் கொடுத்துள்ளதாம்.

பழுப்பு நிலக்கரியை சுரங்கத்திலிருந்துத் தோண்டி எடுத்துச் செல்லும் இயந்திரங்களுக்கும், பூமியைத் தோண்டும் இயந்திரங்களுக்கும் ஆர்டர் கொடுக்கப்பட்டுள்ளதாம்.

## ரூ. 1,15,502 செலவில் திறந்த வெளி அரங்கு

பம்பாய் நகராட்சி மன்றம் நிறுவியுள்ளது

பம்பாய், அக். 25—

பம்பாயில், 'விக்டோரியா கார்டன்ஸ்' என்ற பகுதியில் ரூ. 1,15,502 செலவிட்டு ஒரு திறந்த வெளி அரங்கை நகராட்சி மன்றம் கட்டியுள்ளது. இதற்காகப் பம்பாய் அரசாங்கம் ரூ. 25,000 கடன் அளித்துள்ளது. இந்த அரங்கில் 900 பேர் அமர்ந்து நடைபெறும் நாடகம், திரைப்படம், மற்ற வேடிக்கைகளைக் காண முடியுமாம்.

# சேரிகள் முன்னேற்றம்

ஆமதாபாத் நகரசபை தீவிரம்

ரூ. 11 கோடி செலவிடும்

சேரிகளை முன்னேற்றுவதில் ஆமதாபாத் நகராட்சி மன்றம் தீவிரமாக முனைந்துள்ளது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் இதற்காக ரூ. 11 கோடி செலவிடப்படும் என்று தெரிகிறது.

25,000 குடியிருப்புகளைக்கட்டுவதற்கான திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.

# இராசா தலை ரூபாய்கள்

இன்னும் 6 மாத காலத்திற்குச் செல்லுபடியாகும்

புதுடில்லி, அக். 26—

இப்போது ரூபாய் நோட்டுகளில் சிலவற்றில் அசோக ஸ்தூபியும், சிலவற்றில் பழைய இராசா தலையும் உள்ளதல்லவா?

அக். 28-ந்தேதிக்குமேல் இராசா தலையுள்ள நோட்டுகள் செல்லாது என்று அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனால், இப்போது, மக்களுக்கு இதனால் நஷ்டம் ஏற்படாமல் இருப்பதற்காக இன்னும் 6 மாத காலம் இந்த இராசா தலை பொறித்த ரூபாய் நோட்டுகள் செல்லுபடியாகும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

சென்னை 35-வது வட்ட தி. மு. க. செயற் குழு உறுப்பினர்களுக்கு:

27—10—56 இரவு 8 மணிக்கு, சென்னை 35-வது வட்ட தி. மு. கழகச் செயற் குழுக் கூட்டம் எண் 2, கவரைத் தெரு, கோடம்பாக்கத்தில் நடைபெறும். முக்கியப் பிரச்சினைகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

# கலாச்சாரத் தூதுக்...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

பிரமுகர்களுக்குத் தரப்படுவது போல் கலைஞர்களுக்கும் வரவேற்புகளும் பாராட்டுதல்களும் தர நகராண்மைக் கழகங்கள் போன்றவை முயற்சிகள் செய்ய வேண்டும். நகராண்மைக் கழகங்களெல்லாம் ஆங்காங்கே திறந்த வெளி நாடக மன்றங்களை அமைக்க முன்வரவேண்டும்."

# இட்லர் முடிவு என்ன?

இட்லர் முடிவு என்ன என்பதைக் கண்டறிய 1952-ல் முயற்சி செய்யப்பட்டது.

சென்ற உலகப் போர் முடிவில் அவர் தன்னுடைய உத்தியோகக் காரியாலயத்தில் தற்கொலை செய்துகொண்டார் என்று ஜெர்மன் நீதிமன்றம் இன்று தீர்ப்பு அளித்துள்ளது.

அவர், 1945 ஏப்ரல் 30-ந் தேதி பகல் 3-30 மணிக்குத் தற்கொலை செய்துகொண்டார் என்றும், அவருடைய உடல் பெட்ரோல் ஊற்றி எரிக்கப்பட்டதென்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

## சென்னையில் அலுவல்கள் பல இருக்கிறதாம்!

டிசம்பரில்தான் சென்னையை விட்டு கவர்னர் செல்வாராம்

கோவை, அக். 26—

நவம்பர் மாதம் முழுமையிலும் சென்னையில் முக்கிய அலுவல்கள் பலவற்றைக் கவனிக்க வேண்டியிருப்பதால், பம்பாய் மாநில கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கும் பிரகாசா, டிசம்பர் முதல் வாரத்தில்தான் அந்தப் பதவியை ஏற்கக் கூடுமாம்.

# தோட்டத்தொழிலாளர்

புதிய சம்பள விகிதங்கள் நிர்ணயிக்கப்பட்டன

சென்னை, அக். 25—

நீலகிரி, மலபார், கோவை, மதுரை, சேலம், நெல்லை ஆகிய மாவட்டங்களிலுள்ள 228 தோட்டப் பண்ணைகளிலுள்ள அலுவலரும், தொழிலாளரும் 1952 மார்ச் 24-ந்தேதியிலிருந்து புதிய சம்பள விகிதமும் பஞ்சப்படியும் பெறுவர்.

முதல்தர ஊழியர் சம்பளம் ரூ. 2—4—0; இரண்டாந்தர தொழிலாளர் சம்பளம் ரூ. 1—12—0; சிறுவர் சிறுமிகளின் சம்பளம் ரூ. 1 என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

அன்றியும் ஆண்டுக்கு 2 கம்பளிகள் அளிக்கப்படவேண்டும் என்று தொழில் நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது.

ஒவ்வொரு வருட உழைப்புக்கும் ஒரு மாதச் சம்பளம் 'இராசுடி' யாக அளிக்கப்பட வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## எவ்வளவு தெரியுமா?

கடந்த செப்டம்பர் மாதத்தில், சென்னை அரசாங்கம் நடத்திவரும் பஸ் போக்குவரத்தின்மூலம் ரூ. 12,52,200 வசூலானதாகவும், நாள்தோறும் சராசரி 300-க்கு மேற்பட்ட பஸ்கள் ஓடியதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது.

## சோவியத் ரஷ்யா உதவி

புதுடில்லி, அக். 23—

வெள்ள நிவாரணத்திற்காகப் பண்டித நேருவிடம், ரஷ்ய ஸ்தானீகர் மென்ஷிகோவ், ரூ. 1 இலட்சத்திற்கான 'செக்' ஒன்றைக் கொடுத்தார்.

இந்திய அரசாங்க வர்த்தகக் கார்ப்பரேஷன் இவ்வாண்டு மே மாதத்தில் அமைக்கப்பட்டதிலிருந்து இதுவரை, முதல் ஐந்து மாத காலத்தில் இறக்குமதி—ஏற்றுமதிகளுக்காக மொத்தம் ரூ. 15,30,000 மதிப்புக்கு ஒப்பந்தங்களைச் செய்து கொண்டிருக்கிறது.

# கழகக் கூட்டம்

★

வேலூர்—வேலப்பாடி

பாட்டை வீதியில்

28-வது வட்ட தி. மு. கழக 3-ம் ஆண்டு விழா

28—10—56 மாலை 6 மணிக்கு

தலைவர்: வி. ஜி. இராசரத்தினம்

பேசுவோர்:

ஈ. வெ. கி. சம்பத்

போளூர்—கே. சுப்பிரமணியம்

# சென்னை ஓட்டல் முன் தொழிலாளர் மறியல்

சென்னை, அக். 27—

சென்னை தேவராச முதலியார் தெருவிலுள்ள 'நியூ பிரீமியர் கேப்' தொழிலாளர்கள் இருவர் நேற்று மாலை 5 மணியிலிருந்து 7 மணி வரை அமைதியான முறையில் அந்த ஓட்டலின் முன்பு நின்று கொண்டு மறியல் செய்தனர்.

அந்த ஓட்டல் தொழிலாளர்கள் சிலர் வேலையிலிருந்து நீக்கப்பட்டதை எதிர்த்தும், மற்றும் சில கோரிக்கைகளுக்காகவும், ஓட்டல் தொழிலாளர்கள் தினமும் மாலையில் இரண்டிரண்டு பேராக அமைதியான முறையில் அந்த ஓட்டலின் முன்பு மறியல் செய்வது என சங்கச் செயற் குழுக் கூட்டம் ஏற்கனவே முடிவு செய்திருந்தது.

அம்முடிவிற் கொப்பவே நேற்று, அந்த ஓட்டலில் வேலையிலிருந்து நீக்கப்பட்டிருந்த அறுவரில் அனந்தராமன், சுந்தரவேலு என்ற இருவரும் முதல் நாள் மறியலில் ஈடுபட்டனர்.

கோரிக்கைகளை வலியுறுத்தி அவர்கள் ஒலி எழுப்பினதும், பூக்கடை போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் அதனைத் தடுத்து, ஒலி எழுப்பினால் கைது செய்யப்படுவர் என்று எச்சரித்ததின் பேரில், ஒலிமுழக்கம் செய்வதை நிறுத்திவிட்டு 7-மணிக்கு அமைதியான முறையில் கலைந்து சென்றனர்.

இந்த மறியல் மேலும் தொடர்ந்து நடைபெறும் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

(ந. - கி)

## சென்னை சிம்சன் குரூப் கம்பெனித் தொழிலாளர்

தி. மு. கழகத் தேர்தல் நிதியளிப்புக் கூட்டம்

21—10—56-ல், சென்னை 29-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில் தோழர் டி. எ. தாசன் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில், தோழர் வி. எஸ். கோவிந்தராசன், எம். எ. கரிகாலன், வி. எஸ். நடராசன் ஆகியோர் முறையே சிம்சன் குரூப் கம்பெனித் தொழிலாளர் தி. மு. கழகத் தேர்தல் நிதி மத்திய செயற்குழுச் செயலாளராகவும், துணைச் செயலாளராகவும், பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மேலும் ஒவ்வொரு கம்பெனியின் சார்பிலும் இரண்டு செயற் குழு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ஒவ்வொரு கம்பெனியிலும் துரிதமாகத் தேர்தல் நிதி வசூலித்து அவ்வப்போது 29-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில் தினசரி இரவு 7 மணி முதல் 8 மணிவரை வசூல் செய்த பணத்தைப் பொருளாளரிடம் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ள வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டதுடன், மற்றும் ஒரு முடிவும் மேற்கொள்ளப்பட்டது.

## பீடித் தொழிலாளர் சட்டம்

சென்னை, அக். 25—

பீடித் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் வேலை நிலை பாதுகாப்புப் பற்றிய நகல் திட்டம் தயாராகிவிட்டதாகவும், விரைவில் மசோதா தயாராகிவிடும் என்றும், பொதுத் தேர்தலுக்கு முன்னரே இந்த மசோதா சட்டசபையில் நிறைவேற்றப்படலாம் என்றும் அமைச்சர் பக்தவத்சலம் சட்டசபையில் அறிவித்தார்.

# 'உரிமை' எனக் கருதுவது தவறாகுமாம்!

பண்டித நேரு கூறுகிறார்

ஆமதாபாத், அக். 26—

நீண்ட காலம் சிறைவாசம் அனுபவித்தவர் என்பதற்காகக் காங்கிரசில் பதவி வகிப்பது தங்கள் உரிமை என யாராவது கருதினால், அது தவறு என்றும், தற்போதுள்ள நிலைமைகளைச் சிந்தித்துக் காங்கிரஸ்காரர்கள் நடந்து கொள்ள வேண்டுமென்றும், பண்டித நேரு காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

# 'புனித யாத்திரை'யில் நேருவின் கீதம்!

அலகாபாத், அக். 26—

"தினம் ஒரு வேளை உணவு, வாழ ஒரு வீடு, உடுக்க ஆடை, மருத்துவ உதவி, குழந்தைகளுக்குக் கல்வி வசதி, நாட்டு மக்கள் அனைவருக்கும் வேலை," இதுதான் இரண்டாவது 'புனித யாத்திரை'யின் நோக்கம் என்று, பண்டித நேரு, வெகு அழகாக அரசியல் மாநாட்டில் வர்ணித்துள்ளார்.

நாட்டுக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்ததே முதல் 'யாத்திரை'யின் பலனும்!

"இரண்டாவது யாத்திரை ஆரம்பமாகிவிட்டது; அதற்கு நிறையப் பணம் தேவை; அந்தப் பணம் வெளியிலிருந்தா நமக்குக் கிடைக்கும்?" என்று அவர் கேட்டுவிட்டு, 'இந்த நாட்டின் உற்பத்தியைப் பெருக்கி அமெரிக்கா போன்று பணக்கார நாடாக இந்தியா விளங்கப் பாடுபட வேண்டும்' என்று அவர் கேட்டுக்கொண்டாராம்.

# ஓகோ! அப்படியா!

புதுடில்லி, அக். 25—

உத்திரப் பிரதேச மாநிலத்தில் உருது மொழிக்கு அளிக்கப்படும் ஆதரவை நேரு விரும்பவில்லை என்று கூறப்படுவதை நிருபர்கள் சுட்டிக்காட்டியபோது, பண்டித நேரு, 'உருது மொழிக்குத் தக்க ஆதரவு தரவேண்டியதற்குப் பல காரணங்கள் உள்ளன; இந்திய அரசியல் சட்டத்தில் அதை ஒரு இந்திய மொழியாக ஏற்றுக் கொண்ட பின்னர், அதற்குக் கண்டிப்பாக ஆதரவு அளிக்கப்பட வேண்டும்; மேலும் உருது மொழி, இந்தியாவின் தேசிய மொழியாக விளங்கும் இந்திக்குப் பலத்தைத் தேடித்தருவதாகும்; இரண்டு மொழிகளும் உருவான வரலாறு ஒன்றுதான்; எழுத்துக்களும் வார்த்தைகளும் மட்டுமே மாறுபட்டிருக்கின்றன' என்று குறிப்பிட்டுக் கூறியுள்ளார்.

# விலகமாட்டாராம்!

அரசியலிலிருந்து விலகும் நோக்கம் தனக்கு இல்லை என்று பண்டித நேரு திட்டமாகத் தெரிவித்துவிட்டார்.

அவரும், அவரது சகாக்களும், இந்தியப் புரட்சியின் சின்னங்களாக இருந்து வருகின்றனராம்! 20, 30 ஆண்டுகளாக செல்வாக்கை நிலைநாட்டியுள்ளனராம்!

தங்களுக்குப் பிறகு என்ன நடக்குமோ என்று பண்டித நேருவுக்குத் தெரியாதாம்!

எனவேதான், 'அவர் அரசியலில் இருந்து விலகவேண்டும்' என்ற சிலர் கூறும் யோசனையை ஏற்க முடியாது என்று தெரிவித்துள்ளார்.

## 36 ஆண்டுகள் காங்கிரசை வளர்த்தவர் இராஜிநாமா

புதுடில்லி, அக். 25—

காங்கிரஸ் மேலிடம் தன்னை ஓராண்டுக் காலம் எந்தப் பதவியும் வகிக்கக்கூடாது என்று தடைவிதித்திருப்பதை அறிந்து பஞ்சாப் முன்னாள் அமைச்சர் ஜெகத் நாராயணன், காங்கிரசிலிருந்து

# நபிகள் நாயகம் பிறந்த தின விழா

அண்ணா பேசுவார்

★

29—10—56 மாலை 6-மணியளவில், சென்னை—திருவல்லிக்கேணி சூரியப்ப முதலி தெருவில், முஸ்லிம் முன்னேற்ற வாலிபர் சங்கச் சார்பில், திரு. டாக்டர் சி. ஹுசேன் தலைமையில் நபிகள் நாயகம் பிறந்த தின விழா நடைபெறும். அண்ணா அவர்களும், தோழர் என். வி. நடராசன், திரு. பி. டி. இராசன் ஆகியோரும் மற்றும் தோழர்கள் ஆபிதீன், ஏ. கே. அப்துல் சமது ஆகியோரும் சொற்பொழிவாற்றுவர்.

# கோவை நகரத் தோழர்களுக்கு

வேண்டுகோள்:

"கோவை நகரில், தி. மு. கழகத் தேர்தல் நிதி வசூலுக்காக 28-10-56-ந்தேதி முதல் கழகத் தோழர்கள், வட்டார வாரியாகக் கழக உறுப்பினர்கள், ஆதரவாளர்கள் இல்லங்களுக்கும் தொழில் நிலையங்களுக்கும் வருவார்கள். தோழர்கள் குறைந்த பட்சம் ஒரு நாள் வருமானமும், வசதியுள்ள நண்பர்கள் அதிகமாகவும் கொடுத்துதவவேண்டுகிறோம்.

"தேர்தல் நிதி வசூலுக்கென தனி ரசீதுப் புத்தகம் அச்சிடப்பட்டு நகரக் கழகச் செயற்குழு உறுப்பினர்கள், மாவட்டக் குழு உறுப்பினர்கள், வட்டாரக் கிளைகள், படிப்பகங்கள் இவைகளின் செயலாளர்களிடமும் முக்கியத் தோழர்களிடமும் கொடுக்கப்பட்டுள்ளது. நிதி கொடுக்கும் தோழர்கள் மேல் கண்ட இரசீதுப் புத்தகத்துடன் வருபவர்களிடம் மட்டும் நிதி கொடுத்து இரசீதுப் புத்தகத்திலும் கையெழுத்திட வேண்டுகிறோம்"

என்று கோவை நகரச் செயலாளர் தோழர் சே. அ. இராசமாணிக்கம் அறிவிக்கிறார்.

# வேண்டுகோள்

"இராசிபுரம், சேலம், ஆத்தூர் ஆகிய இடங்களில் யாரோ ஒருவர், என் உறவினன் என்று தன்னைக் கூறிக்கொண்டும், நான் கூட்டத்துக்கு வந்த இடத்தில் உடல்நலம் குன்றியிருப்பதாகவும், அதற்குப் பணம் தேவை என்றும் கூறித் தோழர்களை ஏமாற்றிப் பணம் வசூலித்ததாகச் சில தோழர்கள் தெரிவித்திருக்கின்றனர்; அப்படி யாராவது இனிமேல் அணுகினால் தோழர்கள் உதவிதர வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்"

என்று, தோழர் கோவை செழியன் அறிவித்திருக்கிறார்.

இராஜிநாமா செய்துவிட்டார்.

காங்கிரஸ் அவர்மீது எடுத்த நடவடிக்கை, 'மேலிடத்தின் குற்றம் குறைகளையும் தவறுகளையும் யாரும் கேட்காமல் இருக்கவேண்டும்' என்பதற்காகவேதான் என்று தன்னுடைய விலகல் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

"பஞ்சாப் முதலமைச்சரின் எதேச்சாதிகாரப் போக்கும், சர்வாதிகார முறைகளும், அவரைக் கூடியவிரைவில் செல்லாக் காசாக்கிவிடும்" என்றும் அக்கடிதத்தில் அவர் எச்சரித்துள்ளார்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24, நூரியாநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப் பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

